

கோவிலூர் மடாலயத்தில் 10.1.2014 அன்று நடைபெற்ற பொங்கல் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விஜய - தை - 2014 - ஜனவரி இதழ் - 19

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்






தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

களபமணம் கமழ்கின்ற கார்குழலி கவின்குவளைக்
கண்களுடன் கலைபெருகு கழனி வாசல்
காத்துவரும் கரும்புருவத் திருநெல்லை மதுநதியின்
கரையிலறம் வளர்த்துமனம் களித்த மாதின்
கைப்பிடித்த மான்மழுவன் கடல்தந்த நஞ்சுண்டன்
கவின்கொற்ற வாளீசன் தானே தோன்றிக்
கருணையொடு திருவளித்துப் பொற்பதங்கள் பணிவார்க்குக்
கல்விவளம் தந்துலகில் கற்றோர் ஆக்கிக்

களிவண்டு பண்மிழற்றிக் காந்தாரப் பண்ணிசைத்துக்
ககனவழிப் பறந்துசெலும் காட்சி கண்டு
கலைமுனிவர் பலரிருந்து கற்றுவரும் வேதாந்தம்
காதாரக் கேட்டகிளி கற்றுச் சொல்லக்
கற்பகமும் தேமாவும் கவின்பலவும் சண்பகமும்
கனிபழுத்த கனிமரங்கள் பலவு மாங்கே
காண்பார்க்கு விருந்தளிக்கும் வகையிலகி எழிலூட்டக்
கடுவனொடு மந்திபல திரியும் தென்றல்

வளியுலவ இலைகளெலாம் வளர்சிகையான் சிவன்புகழை
வழுத்துவபோல் சலசலக்க வாழும் புட்கள்
வழிமொழிவ போலரற்றிக் கடலனைய குளத்தவளை
வாய்திறந்தே அரகரா என்றங் கோத
வருமடியர் குழாங்களெலாம் கைகுவித்து வரம்கேட்க
வனசப்பூ குவளைமலர் கலந்த பொய்கை
வளர்கரையில் ஞானியர்கள் சிவன்நாமம் துதித்தோதி
வையமெலாம் வாழ்கவெனும் வரத்தைக் கேட்க

அளிபூண்ட வழுதியனார் அன்றுவந்து தானமைத்த
அருட்கோவில் இடங்கொண்ட அம்மை யப்பன்
அமர்கோயில் திருப்பணியை ஆண்டவரும் தொடர்ந்துசெய
அவர்க்கருளைச் செய்ததிரு நெல்லை மாதின்
அடிபணிவார் நலம்பெறுவார் அஃதுண்மை என்றறிந்தார்
அனுதினமும் வந்துபணி கோவி லூரின்
அன்னையாம் திருநெல்லை மகிழ்கொற்ற வாளீசர்
அடிமலர்கள் தலைக்கணிந்தே அஞ்ச லிப்பாம்.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் .நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

கூதிர் காலம் மறைந்து இளவேனிற் காலம் தொடங்குவதும், இருட்காலம் முடிந்து ஒளிக்காலம் தொடங்குவதும் இந்தத் தை மாதத்தில்தான். நன்னாளில் நாம் சூரியனுக்கும் இயற்கை வளத்திற்கும் நம்முடைய வணக்கங்களை மகிழ்வோடு தெரிவித்துக் கொள்கின்ற நாள்.

இன்றைக்கு நம்முடைய உழவர்கள், உற்பத்தியாளர்கள் அனைவருக்கும் நம்முடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்ற திருவிழா.

எல்லாச் சமயங்களுமே, குறிப்பாக நம்முடைய சைவமும், வைஷ்ணவமும் இயற்கை வணக்கத்தை அடிப்படையாகக் கொண்ட சமயங்கள்; நம்முடைய தமிழ்க் கலாச்சாரம் சிந்துவெளி நாகரீக காலத்தில் இருந்தே இயற்கை வளங்களை இறைவனாகப் போற்றுவது மரபு.

மனித இனம் தொடக்க காலத்தில் இருந்து இயற்கைக்கு அஞ்சியும், இயற்கையை வேண்டி வணங்கியும் வாழ்ந்திருக்கிறது. சூரிய நமஸ்காரம், வசந்த ருது, ஆடிப்பெருக்குப் போன்றவை அரசு, வேம்பு, நெல்லி, ஆல் போன்ற மரங்களுக்கு வழிபாட்டு விழாக்கள், ஐம்பூதங்களுக்கு யாகங்கள் / காணிக்கைகள் என்று வாழ்ந்து இருக்கிறார்கள். அக்காலத்திலேயே இயற்கையினுடைய பருவகால மாற்றங்களை நன்கு அறிந்து அதற்கேற்பத் தங்களுடைய வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கை முழுக்க முழுக்க இயற்கைக்கேற்ப அதன் போக்கிலேயே, அதனையொட்டியே வாழ்ந்தி ருக்கிறார்கள். இயற்கைச் சீற்றங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் தெரிந்து வாழ்ந்திருக்கிறார்கள்.

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்"

சூழ்நிலையோடு ஒத்து வாழ்வது என்பது மிகவும் தேவையான ஒரு

பண்பு. தான் வாழ்கின்ற ஊர், மக்கள், தன்மொழி, தன் இனம் அனைத்தினுடைய பண்புகளை அனுசரித்து வாழ்வதே சிக்கல் இல்லாத, முன்னேற்றத்தையும், மகிழ்ச்சியையும் தரக்கூடிய வாழ்க்கை. அதே போல இயற்கையினுடைய பருவகாலத்திற்கேற்பத் தன்னுடைய வாழ்வு முறைகளையும் அமைத்துக் கொள்வதே சிறப்புடையது. நம்மவர்கள் வெயில்காலத்திலேயே கார்காலத்தில் பயன்படுத்துவதற்காக வற்றல், வறளி, ஊறுகாய் போன்றவற்றைத் தயாரித்து வைத்துக் கொண்டார்கள்.

நல்லவர் அல்லாத மனிதர்கள் தங்கள் சுயநலத்திற்காக இயற்கை வளங்களைக் கொள்ளை அடிக்கிறார்கள். உலகிலே எதுவும் ஐம்பூதத் தொடர்பின்றி உருவாகாது, உருவாக்க இயலாது. செயற்கையாக உருவாகின்ற பொருளுக்கும் இயற்கைதான் அடிப்படை. எனவே தேவையில்லாமல் இயற்கை வளங்களை அழிப்பது உலகின் சமநிலைத் தடுமாற்றத்தை உருவாக்கும். இயற்கைச் சீற்றங்கள், எதிர்பாராத பருவமாற்றங்கள், தாங்க இயலாத அழிவுகளை ஏற்படுத்தும். இதனைத் தடுக்க வேண்டுமானால் இருக்கின்ற இயற்கை வளங்களைத் திட்டமிட்டுப் பகிர்ந்து பயன்பெற வேண்டும். மாற்றுப் பொருள்களைக் கண்டறிய வேண்டும்.

நுகர்கலாசாரத்தால் அழிவு வேகமாகிக் கொண்டு வருகிறது. இப்பொழுது மணல் கிடைப்பது அரிதாக இருக்கிறது. தண்ணீர் அரிய பொருளாகி வருகிறது. எல்லாவற்றிற்கும் விலை கொடுத்து வாங்க வேண்டிய சூழ்நிலை. நல்ல காற்றும் விலைப்பொருளாக மாறலாம்.

எனவே இந்தப் பொங்கல் விழாவிலே நாம் எல்லோரும் இயற்கையோடு ஒத்து வாழ்வோம். இயற்கைக்கு எதிராகச் செயல்பட மாட்டோம் என உறுதிமொழி எடுத்துக் கொள்வோம். நம்மால் முடிந்தவரை இயற்கை வளங்களை அழிக்காமல், அளவோடு பயன்படுத்துவோம். மறு உருவாக்கம் செய்வோம்.

நாம் யாவரும் எல்லா நலமும் வளமும் பெற்று மகிழ்வோடு பயனுற வாழ்வோமாக !

**ஆசிர்வாதங்கள்**

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

**உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

## நூல்

6. இந்கச் சூக்ஷ்ம பூதங்களினின்றும் சூக்ஷ்ம சரீரங்களும், ஸ்தூல பூதங்களும் தோன்றும். அஃது எங்ஙனம் எனின் :- ஆகாசம் முதலான பஞ்ச பூதங்களின் சத்துவ அம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகச் கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில், ஆகாசத்தின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச் சகலமான கேள்விக்கும் இடம் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், வாயுவின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக் கரணமும் வாயுவைப் போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், அக்கினியின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதுஇன்னது என்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தி என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அப்புவின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் அப்புவைப் போல விஷயங்களில் பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச் சித்தம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், பிருதிவியின் அம்சம் கூடினதற்கு அடையாளம், இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று நானென்று அபிமானிக்கின்றது. இந்த அபிமான விருத்திக்கு அகங்காரம் என்று பெயர்.

## விரிவுரை

சுத்தப் பிரமத்தின் இலக்கணம் பூரணம், சத்சித் ஆனந்தம். அதிலிருந்து கற்பிதமாகத் தோன்றிய மூலப் பிரகிருதியில் ஒரு பிரிவு மாயை. அதில் பிரதிபிம்பித்த சத்துவ குணம் பிரம்மே ஈசுவரன் என்றும்,

அதில் பிரதிபிம்பித்த ரஜோ குணமே சீவர்கள் எனவும் முன்னர்ப் பார்த்தோம் தமோ குணத்தில் ஆவரணம் விட்சேபம் என்று சக்தியில் விட்சேபச் சக்தி விருத்தி / விரிவை, வளர்ச்சியை உண்டாக்கும் என்றும் பார்த்தோம்.

தமோ குணத்தின் விரிவாக சூட்சும பூதங்கள் தோற்றத்தை முன்னர்ப் பார்த்தோம். இப்போது சூட்சும பூதங்கள் முக்குண பூதங்களில் இருந்து சூட்சும உடலும் சூட்சும அந்தக் காரணங்கள் சூட்சும ஞானேந்திரியங்கள் தோன்றின. அது எவ்வாறு எனப் பார்ப்போம் (சூட்சும உடல்: கண்ணிற்குப் புலப்படாத உள்ளே இயங்கும் உடல். அந்தக்கரணம்: உள் இருந்து இயங்கும் நுண்மைக் கருவிகள் ஞானேந்திரியம் : வெளியில் புலப்படாத நுண் இந்திரியங்கள்/ புலன்கள்.)

ஆகாயம், வாயு, அக்னி, நீர், பூமி என்னும் ஐந்து சூட்சும பூதங்களில் இருந்து ஒன்றிற்கு ஒரு தன் மத்திரை (ஒருபங்கு) எடுத்துக் கூட்டி வைத்ததால் அந்தக்காரணங்கள் உருவானது. அந்தக்கரணம் என்பது உள்ளிலிருந்து இயங்கும் உட்கருவிகள், நுண்கருவிகள், ஆகாயத்தின் விகிதாசாரம் கூட உள்ள போது ஆகாயத்தின் குணமான வியாபகம், எங்கும் பரந்த தன்மை உடைய உள்ளம் பிறந்தது. உள்ளம் ஆகாயம் போல எல்லாவற்றிற்கும், சகலமான கேளிக்கும், விருத்திக்கும் இடம் அளிக்கும். உள்ளம் என்னும் அந்தக் கரணத்தில் வாயுவின் விகிதாசாரம் கூடும் போது வாயுவின் குணமான அலையும் தன்மை கொண்ட மனம் பிறக்கும். மனம் என்னும் அந்தக்கரணம் ஒரு நிலையில் நில்லாது எப்போதும் அலை பாய்ந்து கொண்டே இருக்கும். இதுவே சகல விதமான விருத்திக்கும், விரிவிற்கும் அடிப்படையானது. இந்த அந்தக்கரணத்திலிருந்து அக்னியின் விகிதாசாரம் கூடுகிறபோது அக்னியின் குணமான ஒளி, தெளிவு, விளக்குதல் ஆகிய தன்மைகொண்ட புத்தி என்னும் அந்தக்கரணம் தோன்றும். இது தொகுத்தும் பகுத்தும் பிரித்தும் அறியும் தெளிவுடையது. இந்தப் புத்தியில் அப்பு / நீரின் குணம் கூடி நிற்கும்போது அதன் குணமான

ஈர்க்கின்ற விஷயங்களைத் தன்னுடைய அலைகளிலே ஒன்று சேர்த்து இழுத்துக் கொள்ளும். அது போலச் சித்தமும் புத்தியால் பகுத்துத் தொகுத்த தெளிந்த விஷயங்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளும். இந்தச் சித்தத்தில் பிருத்வி / பூமியின் குணமான கடினத்தன்மை கொண்ட அகங்காரம் பிறக்கும். பிருத்வி எதற்கும் அஞ்சாத்தன்மை, கடினத்தன்மை கொண்டது. அகங்காரமும் நான் எனது என்று அபிமானத்தைத் தர, சுய பிரியத்தை உண்டாக்கிக் கடினமாக்கி எதற்கும் இணங்கிப் போகாத நிலையை உருவாக்கும்.

அந்தக்கரணங்கள் தானாகச் செயல்பட இயலாது. மற்ற இந்திரியங்கள் உறுப்புக்களோடு இணைந்தே செயல்படவேண்டும். குறிப்பாக மூளையின் உதவியோடு தான் இவை செயல்பட வேண்டும். பொதுவாக எல்லா நூல்களிலும் அந்தக்கரணங்கள் நான்காகத்தான் குறிப்பிடப்படும். உள்ளம் என்ற அந்தக்கரணம் மனதோடு கூடியதாகக்கருதப்படும்.

சில "தத்துவங்களில்" 'ஆகாயம்' ஒரு பூதமாக ஒப்புக்கொள்ளப் படவில்லை. ஆகாயம் என்பது உண்மையில் இல்லாத பொருள். ஆனால் வேதத்தில் நம் தமிழ்மறைகள் இலக்கியங்களில் ஆகாயம் விரிந்து பரந்து எல்லாவற்றிற்கும் அடைக்கலம் தரக் கூடிய பரிசுத்தமான பொருளாகவும் / முதன்மையான பூதமாகவும் கருதப்படுகிறது, விளக்கப்படுகின்றது.

அந்தக்கரணங்கள் ஐம்பூதங்களின் சமஷ்டியாலே / கூட்டுக் கலப்பாலே தோன்றின.

நூல்

7. இன்னும், ஆகாசம் முதலான பஞ்ச பூதங்களினுடைய சத்துவ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியம் என்று சொல்லப்படும். இவைகளில், சுரோத்திரம், ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால்

ஆகாசத்தின் குணமான சத்தம் மாத்திரத்தை அறியும். துவக்கு, வாயுவின் அம்சம் ஆனபடியால் வாயுவின் குணமான பரிச மாத்திரத்தை அறியும். சக்ஷு, அக்கினியின் அம்சம் ஆனபடியால் அக்கினியின் குணமான ரூபமாத்திரத்தை அறியும். சிங்ஙவை, அப்புவின் அம்சம் ஆனபடியால் அப்புவின் குணமான ரஸ மாத்திரத்தை அறியும். கிராணம் பிருதிவியின் அம்சம் ஆனபடியால் பிருதிவியின் குணமான கந்த மாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக்கரணத்தில், ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க் கூடினது கொண்டு ஐந்து இந்திரியங்களினாலும், ஐந்து விஷயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்தில் உண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், ஆகப்பத்தும் சத்துவ அம்சம் ஆனபடியால் ஞானசாதனம் ஆயின.

### விரிவுரை

இனி ஆகாயம், வாயு, அக்னி, நீர், பூமி ஆகிய பஞ்ச பூதங்களில் இருந்து ஒருபங்கு தனித்தனியாக எடுத்து சத்துவ குணத்தோடு கூட்டினால் ஞானேந்திரியங்கள் உருவாகும். (அறிவுக்கருவிகள்)

ஆகாயத்தின் குணமான சப்தத்தை/ஓசை அறியக்கூடிய சுரோத்திரம் (காது) உருவாகும். காது சத்தத்தை/ ஓசை மாத்திரமே அறியும்.

சத்துவகுணம் வாயுவுடன் கூடும் போது வாயுவின் தனிக்குணமான ஸ்பரிசத்தை உணர்கின்ற துவக்கு (தோல்) உருவாகும். தோல் தோடு உணர்வை மட்டுமே அறிய முடியும். சத்துவத்தோடு அக்னி பிரதானமாகக் கூடினால் ஒளி வெளிச்சத்தை அறியக்கூடிய சசஷீ (கண்) உருவாகும்: சத்துவத்தோடு அப்பு(நீர்) பிரதானமாகக் கூடினால் நீரின் குணமான ரசத்தை (ருசி/சுவை) அறியக்கூடிய நாக்கு (சிங்குவை) உண்டாகும். பிருத்வி / பூமியின்

அம்சமான சத்தத்தை (வாசனை / நாற்றம்) அறியக்கூடிய கிராணம் (மூக்கு) வாசனையை மட்டும் அறிய முடியும். இந்த அறிவுக் கருவிகள் தங்கள் தனிக்குணமான சத்தம், தொடு உணர்வு, பார்த்தல், ருசித்தல், நுகர்தல் போன்ற குணங்களைத் தனியாக மட்டுமே அறிய முடியும்.

காதால் பார்க்கவோ, கண்ணால் நுகரவோ இயலாது. மேலும் இவை மற்ற உறுப்புக்கள், குறிப்பாக மூளையுடன் இணைந்து மட்டுமே செயல்படமுடியும். மேலும் புறச் சூழலும் துணை இருந்தால் மட்டுமே செயல்படும். வெளிச்சம் இல்லையெனில் கண் பார்க்க இயலாது. வறண்ட நாக்கால் ருசிக்க இயலாது.

இந்த ஐந்து புலன்களும் அந்தக்கரணங்களும் ஆகப் பத்தும் சத்துவ குணம் அதிகம் உள்ள படியாலும் இவை அறிவதற்குரிய கருவிகள் என்பதாலும் ஞான சாதனங்கள் என அழைக்கப்படும்.

*தொடரும்....*

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

முனைவர். நா. வள்ளி

**தீர்த்த மகிமை உரைக்கும் படலம் :**

அகத்திய மாமுனிவர், சைமினி முனிவருக்கு வன்னிவனத் தலத்திலே எழுந்தருளியுள்ள, 'சாலிவாடீசுவரி' என்னும் திருநெல்லைநாயகி சுதர்மைக்கு அருள் செய்த வரலாற்றையெல்லாம் எடுத்தோதியவர் அடுத்து அத்தலத்திலுள்ள மதுப்பொய்கையென்னும் தீர்த்தத்தின் சிறப்புகளைச் சொல்லத் தொடங்கினார்.

முன்னொரு காலத்தில் மாமதில்சூழ் மதுராபுரியை வீரம் நிறைந்த சூரதன்மா என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் சிறந்த சிவபக்தன். எல்லையற்ற மகத்துவங்களையுடைய வெண்ணீற்றை மிகுந்த வாஞ்சையோடு அணிபவன். சிவனடியார்களுக்கு உறும் இன்னல்களைத் தீர்க்கும் அருங்குணத்தினன். அம்மன்னனுடைய வாழ்க்கைத் துணையாக அமைந்தவள் 'சுகுணை' என்னும் குணவதி. அவள் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளை விருப்போடு செய்பவள். சிவபிரானிடத்து அன்புடையவள். சிவபூசையை நியமத்தோடு செய்பவள். சிவனடியார்களை உபசரிப்பதில் பெரு விருப்புடையவள்.

இப்படியாக இவர்கள் இருக்கும் நாளில் ஒரு நாள் அரசனிடத்துச் சமணர்களான பாசண்டர்கள் சிலர் வந்தனர். அவர்கள் அவனிடம் அன்பான மொழிகள் கூறுவாராய், இந்திரசால வித்தைகள் சிலவற்றைக் காண்பித்து, அரசன் சைவசமயத்தினின்றும் நீங்கித் தங்கள் சமண மதத்தின்பால் பற்றுவரும்படிச் செய்தனர். முன் செய்த தீவினையின் பயனாய் மன்னவனும், கங்கைசூடியவரான சிவனாரின் அடியைப் பணிந்து, நீறு பூசுதல், உருத்திராக்கம் அணிதல், ஐந்தெழுத்தை ஓதுதல் ஆகியவற்றினின்றும் நீங்கிச் சமண சமயத்தைத் தழுவினான். மாதொரு பாகனான சிவபெருமானின் அடியவர்கள் எதிர்ப்பட்டால், அவர்களைக் கண்டதாலும், அவர்கள் வார்த்தைகளைக் கேட்டதாலும் 'கண்டு முட்டு' 'கேட்டுமுட்டு' ஏற்பட்டதாகக் (கண்டதனால்

தீட்டு, கேட்டதனால் தீட்டு) கோபத்தோடு சீறுகின்ற இயல்புடையவனாக மாறிப் போனான்.

"வண்டுவார் குழல்பாகனார்
தொண்டு பூண்டவர் நேர்வரின்
கண்டு முட்டுக் கலந்ததென்று
அண்டு சீற்றத்து அழலுவான்
நீட்டு செஞ்சடை நாதனை
வேட்டு நிற்பவர் என்றிடின்
கேட்டு முட்டுக் கிடைத்ததென்று
ஆட்டு கோபத்தின் ஆகுவான்"

வேதங்களை நிந்தை செய்கின்றவர்களும், நால் வருணாச் சிரமத்தை நீத்தவர்களும், பித்தர்களுமாகிய சமணர்களோடு உறவாடி அம்மதத்தைப்போற்றி ஒழுகினான். அதனால் பாண்டி நாடெங்கும், கையில் மயில் தோகையையும் பாயையும் உடைய சமணர்களே நிறைந்திருந்தனர். குண்டராய அமணர்களின் பாழியும் பள்ளியுமே நிறைந்து சிவாலயங்கள் எல்லாம் குறைவுற்றன.

"தங்கு மாதவப் பாண்டிநாடு
எங்கும் மாமயில் தோகையும்
பொங்கு பாயுடைக் கோலமும்
அங்கு அறாது மலிந்தவே"
"குண்டராய அமணர்கள்
கண்டபாழியும் பள்ளியும்
மண்ட மற்றுள ஆலயம்
ஒண்தவக் குறைந்ததே"

மன்னனது செயலையும், நாட்டின் நிலையையும் கண்டு அவன் மனைவி சுகுணை மிகவும் மனம் வருந்தினாள். "சிறந்த சைவ சமயத்தைவிட்டு, இப்படிச் சமண சமயத்தைத் தழுவுதற்கு முற்பிறப்பில் என்னபாவம் செய்தோமோ ! அந்தோ அந்தோ !" என்று இரங்கினாள். சமண் ஒழிந்து, உவமையிலாச் சைவம் சார்ந்து தன் கணவன் உய்யும்

நாள் எந்நாளோ என்று ஏங்கினாள். பாண்டி நாட்டிலே நல்லவையெல்லாம் அழிந்தொழிந்ததே என்று வருந்திப் பேரிடர் உற்றுத் தன் துணைவனுக்கு அறிவுரைகள் கூறத் தொடங்கினாள். "என்னுயிர்த் துணையாகிய மன்னவா, நான் கூறுவனவற்றை அருள் கூர்ந்து கேட்பாயாக ! பாசண்டராகிய சமணர்கள் தீமையே வடிவானவர்கள்; வேதமே பிரமாணம். சிவபூசையே மெய்ப்போதம். திருநீறு உருத்திராக்கம் முதலியனவே உண்மையான சாதனம். சிவபூசையின் பயனால்தான் நமக்கு நாட்டை ஆளுகின்ற பேறும் வெண்குடை, சாமரம், நல்ல இலக்கணமுடைய பரிகள், கரிகள் (யானைகள்) மற்றுமுள ஐசுவரியங்கள் பலவும் கிடைத்தன. ஆகமங்கள் கூறுகின்ற விதிப்படி திருநீறு, உருத்திராக்கம் அணிந்து செய்த சிவபூசையின் மகிமையாலன்றோ நமக்குப் பலபேறுகள் வாய்த்திருக்கின்றன. சிவபூசை செய்யாமல் நீண்ட காலம் உயிரோடு இருப்பவர்கள் காற்றடைத்த துருத்தியையும் நெடுமரத்தையும் போல்வர். நீறணிந்து, பரமசிவமாகிய சோதியைப் பூசனை செய்யாமல் உண்டு உறங்கி வாழ்வதால் எந்தப் பயனுமில்லை. அவர்களை இரண்டு காலுள்ள விலங்குகள் என்று உலகோர் உரைப்பர்.

"விள்ளரும் சிவபூசை செய்து
எள்ளரும் துதிசெய்திலார்
வள்ளல் மன்ன ! இரண்டு கால்
உள்ள மாவென்று உரைப்பரே"

விண்ணுலகு வேண்டினும், நான்முகன் உலகமாகிய பிரம்மலோகம் வேண்டினும், தார்க்கியயானம் (முத்தி) வேண்டினும், தவம் முதலியவற்றில் சிறந்திருக்க வேண்டினும், யாவரும் சிவபெருமானின் அடியிணைகளைக் கடிமலரால் அருச்சித்து வணங்குவர். இவ்வாறு சிவபூசையின் மகிமையினால் சகலபேறுகளும் கிடைக்கத்தக்கனவாயிருக்கத் தாங்கள் சைவத்திலிருந்து நீங்கிச் சமணத்தை அடைந்து என்ன காரியம் செய்தீர்கள் ? மன்ன ! இது நீதியாகுமோ? தீய பாவச் சமணெனும் மாயச் சமயத்தைத் தழுவாது சைவத்தைச் சார்ந்து மேன்மையடையுங்கள்" என்று வேண்டினாள்.

"இன்ன சைவம் ஒருவிநீ
துன்னு பாவச் சமண்புகூஉ
என்ன காரியஞ் செய்தனை ?
மன்ன நீதியாகுமோ ?"
"தீய பாவச் சமண் எனும்
மாயமாஞ் சமயம் தழேல்
ஆய சைவத்து அடைந்துநீ
பாய மேன்மை படை" என்றாள்.

இவ்வாறு சுகுணை பலநீதிகளை எடுத்துக்கூறியும், மன்னன் தீவினை வசத்தால், சமண மதத்திலேயே நின்றான். துறவு மேற்கொள்ளும்போது, தலைமுடியைப் பறித்துக் கொள்ளும் வழக்கமுடையவர்கள் சமணர்கள். அத்தகையவர் சார்பினால் அரசனும் அற்ப ஆயுளிலேயே உயிர்நீத்தான். சுகுணையும் அவன் பிரிவாற்றாது உடன் மாய்ந்தனள்.

'தலை பறிப்பவர் சார்பினால்
நிலை குலைந்து உயிர்நீத்தனன்
மலைவில் கற்பில் சுகுணையும்
உலைவிலாது உடன் மாய்ந்தனள்'

பின்னர், கற்பிற்சிறந்த சுகுணையும் முன்பு செய்த புண்ணியத்தினாலே, அகளங்கபுரம் என்னும் நாட்டை யாண்ட மன்னன் மகளாகப் பிறந்தாள். சுகுணையின் கணவனான சூரதன்மாவும் சாகலபுரத்து மன்னன் குமாரனாகப் பிறந்து, முன் செய்த ஊழ்வினைப் பயனால் குட்ட நோயினால் பீடிக்கப்பட்டவனாக இருந்தான்.

"அகனிலம் வியக்கும் செல்வச் சாகலபுரத்தை ஆள்வான்
மகனெனப் பிறந்தும் பண்டுபுரிந்த பாவத்தாலே
உகன் மிகு குட்ட நோயும் ஒழுகு நெய்த்தோருமாய
விகன்மிகு பிணிக்கோட்பட்டான் வினைப்பயன் இரிவதுண்டோ ?"

இவ்வாறு அவன் நோய்வாய்ப்பட்டு வருந்தும் நாளில், அகளங்கபுர மன்னன் தன் மகளுக்கு மணமுடிக்க எண்ணி சுயம்வரத்திற்கு ஏற்பாடு செய்து உலகிற்கு அறிவித்தான். சுயம்வர அழைப்பை ஏற்று, பல நாட்டு அரசகுமாரர்களும், மகிழ்வோடு நால்வகைச் சேனைகள் சூழத் தத்தம் ஊர்திகளிலேறி அகளங்கபுரத்திற்கு வந்து சேர்ந்தனர். வந்த அனைவரும் கல்யாண மண்டபத்தில் இனிதிருந்தனர். குட்ட நோய் பீடித்த சாகலவேந்தன் மகனும் சுயம்வரம் காண்பதற்காக வந்து ஒரு பக்கத்திலிருந்தான். அகளங்கன் மகளும் மாலையேந்தியவளாய் சுயம்வர மண்டபத்திற்குச் சென்று காமனைப் போன்று பொலிகின்ற அரசகுமாரர்களைப் பார்த்துக் கொண்டு செல்பவள் ஒருபால் குட்டி (குட்டநோய் உடையவன்) உறைவது கண்டாள். அவனைக் கண்டு பூருவ ஞானத்தால், முற்பிறப்பில் இவனே தன் கணவன் என்று உணர்ந்தாள். அவன் தன்னுடலைப் போர்வையால் மறைத்துக் கொண்டு, மெய்யெல்லாம் புண்ணீர்சோர இருப்பதையும் உணர்ந்து கொண்டாள்.

"குட்டியைக் காண்டலோடும் கோதறு ஞானத்தாலே
ஒட்டி முற்பிறப்பில் வாய்த்த கணவனென்று உணர்ந்தாள் அன்னான்
விட்டிடாப் போர்வைபோர்த்து மெய்யெல்லாம் புண்ணீர்சோர
உள்திகழ்தலுமிலானாய் உறைதரு திறனும் ஓர்ந்தாள்"

முன்வினையின் பயனாலே இவ்வாறு நோய்வாய்ப்பட்டான் என்பதை உணர்ந்து, கணவன் மனைவி தொடர்பு எழுவகைப் பிறப்பினும் விடுவதுண்டோ என நினைந்து, தன்னுள் மகிழ்ச்சிபூப்ப, தன் கரத்திலிருந்த மாலையை அவன் கழுத்திலிட்டாள். அவள் செயலைக் கண்டு அனைவரும் நகைத்தனர்.

"முன்னுறு பவத்துச் சேர்ந்தான் இவன்முழு நோய்க் கோட்பட்டான்
என்னினும் விடுவதுண்டோ எழுவகைப்பவத்துமென்று
தன்னுள் மகிழ்ச்சிபூப்பத் தடங்கரத்திலிருந்த மாலை
அன்னவன் கழுத்திலிட்டாள் அனைவரும் நகைத்தாரன்றே"

மன்னவர் குமாரரெல்லாம், 'வடிவில் சிறந்தவர்களும் பலகலைகளைப்

பயின்றவர்களுமாகிய எங்களைப் பாராளாகி இந்தக் குட்ட நோயாளியின் தோளில் மாலை சூட்டினாளே' என்று எள்ளிநகையாட, அவள் தந்தையும் வெட்கப்பட்டுத் தலை குனிந்தான். அனைவரும் எள்ளிநகையாட, தந்தை துன்பக்கடலில் மூழ்குதலைக் கண்ட மகளும் தந்தையின் மனதைத்தேற்றி, திருமணச் சடங்குகளை யெல்லாம் முறைப்படி நடக்கச்செய்து, பின் தன் கணவனான குட்டநோயாளனொடு சாகலபுரம் போய்ச் சேர்ந்தாள். அங்கு தன் கணவனுற்ற பிணியைத் தீர்க்கும்வண்ணம் மணிமருந்தாதிகள் கொடுத்துப் பணிவிடை செய்துவந்தாள். மருத்துவத்தால் அவனுற்ற பிணி தீரவில்லை. வருந்திய அவள் மெய்யில் புண்ணீர்வடியும் கொழுநனோடு புண்ணியத்தலங்களுக்குச் சென்று தீர்த்தமாடப் புறப்பட்டாள். கங்கையில் நீராடி காசி விசுவநாதரை வணங்கினாள். மேலும் பலதலங்களுக்கும் சென்று தீர்த்தமாடி பொன்னையும் பொருளையும் தானமாக வழங்கியும் பிணி அகலவில்லை.

இப்படியாகத் தீர்த்தமாடி வருங்காலத்தில் முன் செய்த புண்ணியத்தின் பேற்றால் வன்னிவனமாகிய சமிவனத்தை அடைந்து, திரிபுவனநாதரின் திருவடிகளையும் திருநெல்லையின் கிண்கிணித் தாள்களையும் வணங்கினாள். தன் கணவனுற்ற நோய் தீர வேண்டுமென்று கார்த்திகை மாத, திங்கட்கிழமையன்று கோடச உபசாரத்துடன் வழிபாடு செய்து, திரிபுவனேசரின் அருளை வேண்டி இரவு முழுதும் கண்விழித்து, அதிகாலையில் தன் கணவனோடு, சகல பாவங்களையும் தீர்த்தருளும் மதுப்பொய்கையை அடைந்து சங்கற்பம் செய்து கொண்டு பொய்கையினுள் கணவனுடன் மூழ்கி எழுந்தாள். எழுந்த அளவிலே அற்புதம் என்னும்படியாக அவளது கொழுநனைப் பீடித்திருந்த குட்டநோய் தீர்ந்து, அவன் பொன்னிறமேனி பெற்றான். அதுகண்டு இருவரும் ஆனந்த வெள்ளத்து அழுந்தினர்.

பின்னர், ஆனந்தத்தோடும், அன்போடும், பக்தியோடும் நீறுபூசி, விளங்கு கண்மணிகள் (உருத்திராக்கம்) பூண்டு, ஐந்தெழுத்தைத் தியானித்து, வன்னிநாதரை, நெல்லைமாதை நயந்து போற்றினர். அவர்களைக் கண்டவர்கள் அனைவரும் மூழ்கியெழுந்தபோதே

குட்டநோயும் அகன்று மேனியும் ஒளிர்ந்தது என்றால் இத்தகு தீர்த்தம் போல் புவனியில் எங்குண்டு என்று வியந்தனர். மணம் நிறைந்த பூக்கள் மல்கிய மதுத்தடாகத்தைத் தழுவிவந்த காற்று ஒருவர் மீது பட்டாலே பிறவிநோய் தீருமெனில், குட்டநோய் தீர்ந்தது எனல் வியப்பன்று என்றனர்.

"மணமலி நறியபூக்கள் மல்கிய மதுத்தடாகம்
புணர்சிறு காற்றில் தோய்ந்த போதினும் பிறவிநோயும்
குணமிக ஒழியுமென்னிற் குட்டநோய் முழுகினோர்க்குப்
புணர்தராது ஒழிந்ததென்று புகல்வது வியப்பாங்கொல்லோ"

முப்புவனநாதரின் வடிவமே என்னும்படியான அந்த அழகிய மதுப்பொய்கையை நீர்வடிவமானது என்று சொல்வதைவிட நெருப்புவடிவமானது என்றே சொல்லலாம். ஏனெனில் தீவினையாகிய காடு கருகும்படியாகத் தகிக்கும் ஆற்றலுடையது அப்பொய்கை.

"ஒருருவேனும் இல்லாது ஒளிரும் முப்புவனநாதர்
ஆருருவாய அந்த அணிமதுப் பொய்கை தன்னை
நீருரு என்பதென்னை நெருப்புருவென்றே சொல்வாம்
காருரு வினையாங்காடு கருகிடத் தகிக்குமாற்றால்"

பிதிருக்கள் தம் தினத்திலே அதாவது அமாவாசையன்று, தீர்த்தத்திலே நீராடி, முப்புவனேசரை வணங்கி, வேதியருக்குச் சிறிதளவேனும் தானம் நல்கினால், கயை நதிதீரத்திலே பன்னாள் பிதுருக்களுக்குப் பிண்டமிட்ட பலனிலும் மேலான பலன் உண்டாகும். நாற்பத்தைந்து நாட்கள் அத்தீர்த்தத்தில் மூழ்கி நீராடி, நெல்லைநாயகியின் சந்நிதியில் மாவிளக்கு ஏற்றி வழிபட்டால், மகப்பேறு நிச்சயம் வாய்க்கும். பாவங்கள் தொலைய கங்கையாடச் செல்வதைப் போல இந்தமதுப் பொய்கைக்கு வந்து நீராடுவர் எனில் இப்பொய்கையின் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ ? மதுத் தடாகத்திலே வாழும் மீன்கள் முதலியனவும் நற்பேறு பெற்றவை. மதுநதியுள் மூழ்கிய (தேனாறு) அளவிலே மூழ்கியோர் வினையெல்லாம் நிமிடத்தில் ஊழ்த்துமாயும், மூழ்கி எழுந்த அளவிலே அறம்முளைத்தெழும்.

கரையைப் பொருந்திய அளவிலே நற்கதியுண்டாகும். மதுநதி என்றும் மதுத்தடாகம் என்றும் இரண்டாகக் கூறுவது முருகக்கடவுளாகிய குமரனும் அரனும் வெவ்வேறாகிய இருவர் என்று கூறுவதை ஒக்கும். ஒன்று தரும் பலனை இன்னொன்றும் தரும்.

"மதுநதி மதுத்தடாகம் என இரண்டாக மன்னு
முதுபுகழ்க் குமரன் மூவா அரனென மொழிதல் போலும்
இதுதரும் பலனை அம்ம அதுதரும் எண்ணிலாமல்
அதுதரும் பலனை அம்ம இதுதரும் ஆடினோர்க்கே"

தவம், தானம், விரதம் ஆகியவற்றால் கிடைக்கும் புண்ணியங்கள் யாவும், இத்தீர்த்தத்திலே முழுகியெழுந்தாலே கிடைக்கப்பெறும். இப்படிப்பட்ட மகிமைகளையுடைய மதுப்பொய்கையிலே மூழ்கியெழுந்து குட்டநோய் நீங்கி அழகிய வடிவைப் பெற்ற மன்னனும் அவன் மனையாளும், கழனியம்பதியாகிய வன்னிவனத்திலே சில காலம் தங்கியிருந்து பொன்னாலும் பொருளாலும் திரிபுவனேசரையும் திருநெல்லையம்மையையும் அன்புடன் அருச்சித்து வணங்கிப் பின் சாகலபுரத்தைச் சென்றடைந்தார்கள். அங்கு இரதியும் மன்மதனும் எனப் பன்னாட்கள் வாழ்ந்து போகங்களை முறைப்படி துய்த்து நன்மக்களைப் பெற்றுத் திரிபுவனேசரின் அருளால் சிவபதமடைந்து இன்புற்றிருந்தனர்.

மதுப்புட்கரணி தீர்த்தத்திற்கு மேற்பால் பிரம்மமதீர்த்தம் என்றொரு தீர்த்தம் உண்டு. அத்தீர்த்தத்தில் நீராடினால் அருமறை விரோதரானாலும் கொலை போன்ற பாதகங்களைச் செய்த மகாபாவியானாலும் சகல பாவங்களும் நீங்கிச் சித்தராய் இறையருள் பெற்று வாழ்வர்.

இவ்வாறு அகத்தியமுனிவர், வீர பாண்டிய மன்னனுக்குக் கூறியவற்றையெல்லாம் சைமினி முனிவருக்கு எடுத்துரைத்து, இன்னும் மதுப்பொய்கையின் சிறப்பையும், அப்பொய்கை வீரசேனன் என்னும் பாண்டிய மன்னனின் சாபத்தைத் தீர்த்த வரலாற்றையும் கூறத் தொடங்கினார்.

*தொடரும்....*

## எண்ணத்தில் பூத்த
## வண்ணப்பூக்கள் ஆயிரம்
## மனம்

முனைவர் மெ. மெய்யப்பன்

* மனம் என்பது ஒரு மாயவலை; அதில் சிக்கிக் கொண்டால் தண்டனை ஆயுள் வரை. பிறந்தவுடன் எவரும் மனதைப் புரிந்து கொள்ளும் பக்குவத்தைப் பெற்றிருப்பதில்லை. இதனால் மனதின் தன்னிச்சைப் போக்கு முதலில் தூண்டப்பட்டு விடுகிறது. இதை உணர்ந்து தடையை ஏற்படுத்திக் கொள்பவர்கள் மாய வலையில் சிக்கித் தவிப்பதைத் தவிர்த்துக் கொள்கின்றார்கள். தடையில்லாத சூழலை வளர்த்துக் கொள்பவர்கள் துயருறுகின்றார்கள்.

* வேண்டாத விதை முளைத்துச் செடியாக இருக்கும் போது அதைப் பிடுங்கி எறிவது சுலபம். மரமாக வளர்ந்த பின் அதை அகற்றுவது அவ்வளவு எளிதில்லை. மனம் என்ற நிலத்தில் வளரும் தேவையில்லாத எண்ணங்களின் நிலையும் இது தான். மனதில் தோன்றும் விகாரங்களை இளமைக்காலத்திலேயே அழித்துவிட வேண்டும். இல்லையென்றால் வாழ்க்கையும் விகாரமாகிவிடும்.

* மனமிருந்தால் வழிபிறக்கும் என்பர் பெரியோர். மாற்றங்கள் நம் மனதில் தானே ஒழிய பிறர் கையிலோ அல்லது கடவுளிடத்திலோ இல்லை.

* நமக்கிருக்கும் ஒரே எதிரி நாம் தான் என்பதையாரும் ஒப்புக் கொள்வதே இல்லை. ஏனெனில் நமக்கு எதிரிகள் பிறர் தான் என்பதில் உறுதியான நம்பிக்கையை அதற்கு முன்பாகவே வளர்த்துக் கொண்டு விட்டோம்.

* உண்மைகளில் விட, பொய்களில் மனம் அதிகம் மயங்குகிறது. அதனால் நேர்மையான வழி முறைகளைக் காட்டிலும் தவறான போக்குகள் மனதை ஆக்கிரமித்துக் கொண்டு வருகின்றன.

* குறைவை ஒரு குறையென நினைக்கத் தெரிந்தவர்கள் எவரும் மிகையும் ஒரு குறையேயென நினைப்பதில்லை.

* தனக்கு எந்த விதத்திலும் பாதிப்பு ஏற்படாது என்பதை உறுதி செய்து கொண்டு விட்டால் வன்மையான கருத்துகளையும், கடுமையான செயல்களையும் தாராளமாக ஒப்புக் கொண்டு விடலாம்.

* எதிரி என்று உண்மையிலேயே யாரேனும் இருப்பதாக நீ நினைத்தால் அது உன் மனமாகத்தான் இருக்க முடியும்.

* மனம் நினைப்பதையெல்லாம் அடைய விரும்பிச் செயல்பட்டால் அது தவறாக முடியும்; தன்னைப் போலப் பிறரும் அப்படிச் செய்ய முற்படும் போது தான் பெரும்பாலானோர்களுக்கு அவர்களுடைய தவறான விருப்பங்களே தெரிய வருகின்றன.

* ஒருவர் தமக்கு அரிய வாய்ப்பாகக் கிடைத்த வாழ்க்கையைப் பாழ்படுத்தி விடுவதற்குப் பெரும்பாலும் அவரே காரணமாக இருக்கிறார். இதை எவ்வளவு தெளிவாக எடுத்துக் கூறினாலும் எவரும் ஒப்புக் கொள்வதில்லை. தன்னுடைய துன்பங்களுக்குப் பிறரே காரணம் என்பதில் அவர் கொண்டுள்ள உறுதிப்பாடு அவருடைய மெய்யறிவை மயக்கி விடுகிறது. அறநெறிகள் மட்டுமின்றிப் பிறநெறிகளும் மிகச் சாதாரணமாக அறிமுகப் படுத்தப்பட்டு வரும் இவ்வுலகில் மனக்கட்டுப்பாடு இல்லாத வாழ்க்கை காட்டாற்று வெள்ளம் போன்றது.

* மனம் ஒன்றைப் பலவாக்கும். அறிவு பலவற்றை ஒன்றாக்கும். முன்னது எண்ணங்களைச் சிதறவிட்டு விளையாடும். பின்னது எண்ணங்களை ஒன்று குவித்துச் சிந்திக்க வைக்கும்.

* மண்ணில் மரத்தையும் மனதில் மனித நேயத்தையும் நட்டு வளர்த்து வா. அது தான் மனித இனத்தின் நலங் காக்கும். சாகாத சமுதாயம் காலமெல்லாம் உனக்கு நன்றி கூறும்.

❋ ஒன்றும் இல்லாதிருப்பதே ஒப்பற்ற இன்பம் என்ற உண்மையை மனம் பொதுவாக ஒப்புக் கொள்வதில்லை. இழப்பதற்கு ஏதுமில்லை என்ற நிலையில் இருந்த இன்பம் எதோ ஒன்று கைக்கு வந்த பிறகு காணாமற் போய்விடுகிறது.

❋ மனம் சலனப்படுதல் என்பது கருத்தை உறுதியாக ஏற்றுக் கொள்ளாததின் பின் விளைவாகும். ஒரு கருத்து, தனக்கு அனுகூலமாக இருக்கும் போது ஒரு நிலையிலும் அதே கருத்து, பாதகமாக இருக்கும் போது வேறு நிலையிலும் இருப்பதை விரும்புவதால் மனம் சலனப்படுவதை ஒருவராலும் கட்டுப்படுத்த முடிவதில்லை.

❋ மனம் ஐம்பொறி வாயிலாகப் பெற்ற விஷயங்களை அசை போட்டுக் கொண்டே இருக்கும். ஒரு நேரத்தில் நிகழ்காலத்தை நினைக்கும். அடுத்த நொடியில் ஒரு யுகம் தாண்டிச் சிந்திக்கும் கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திற்குப் பின்னோக்கிச் செல்லும். சட்டென ஆயிரமாயிரம் ஆண்டுகள் தாண்டி எதிர்காலத்தில் நடமாடும். காலத்தையும் சரி தொலைவையும் சரி நீட்டியும், சுருக்கியும் கற்பனை செய்வதில் மனதை மிஞ்ச இயற்கையால் கூட முடியாது.

❋ சாதனையாளராக வர வேண்டும் என்பது நல்லது. ஆனால் முக்கிய மானதில்லை. மனிதன் மனிதனாக வாழ வேண்டும் என்பது தான் மிக மிக முக்கியமானது. அத்துமீறல்களைச் செய்து விட்டுச் சாதனையாளன் என்று தம்பட்டம் அடிப்பது மடமை. அதனால் யாருக்கும் யாதொரு பயனுமில்லை. மாறாகச் சமுதாயத்திற்குப் பாதிப்பே. ஏனெனில் சாதனையாளனைப் பார்த்துப் பின்பற்றுபவர்களை விட அத்துமீறல்களைக் கண்டு அதைப் பின்பற்றுபவர்களே அதிகம். பிறர் சாதனைகளைப் பார்த்துத் தானும் அப்படிச் சாதனை செய்ய வேண்டும் என்று

ஆசைப்படுவார்களே ஒழிய முனைந்து செயல்பட முயற்சி செய்ய மாட்டார்கள். நல்ல செயல்களை வெறுப்போடு விரும்புவார்கள். தீய செயல்களை விருப்பத்தோடு வெறுப்பார்கள். நாம் எது நலிவடைய வேண்டும் என்று நினைத்து முயல்கின்றோமோ அது எல்லோராலும் நிறைவேற்ற முடியாமல் இருப்பதற்குக் காரணம் மக்களின் இப்படிப்பட்ட மன நிலைதான்.

* உலகம் இன்றைக்குப் பலவாகிக் கொண்டே போகிறது என்றால் அதற்கு மனிதர்கள் மேலும் மேலும் மனத்தால் மட்டுமே ஆளப்பட்டு வருகின்றார்கள் என்று பொருள் அறிவைப் புறக்கணித்து மனதின் ஆளுகைக்கு உட்படுவதால் ஏற்படும் பின்விளைவுகளில் இதுவும் ஒன்று.

* எப்போதும் சலனப்பட்டுக் கொண்டேயிருக்கும் மனதினால் எளியவை கூட சாத்தியமற்றுப் போகின்றன. இதை நாம் தெரிந்து வைத்திருக்கின்றோம் என்றாலும் கட்டுப்பாடுடன் கூடிய அக்கறை காட்டுவதில்லை . என்பதால் இந்நிலையில் மாற்றம் ஏற்படுவதற்கும் வழியில்லாது போகிறது.

* மனக் கட்டுப்பாடு உறுதியாக இல்லாவிட்டால் முன்னேற்ற நடவடிக்கைகள் ஒரு பயனும் தருவதில்லை.

* மனம் ஒரு குரங்கு. அதை ஒரே இடத்தில் இருக்குமாறு செய்வது மிகவும் கடினம். அதைச் செய்துவிட்டால் உங்களை வேறொருவர் மிஞ்சுவது கடினம். எப்போதும் முன் மாதிரிகளைத் தேடிக் கொள்கிற மனம் ஒருவருடைய கற்பனையையும், படைப்பாற்றலையும் மட்டுப்படுத்தி விடுகின்றது. முதலில் நம்மை யார் என்று உலகிற்குத் தெரியப்படுத்தி விட்டால் முன் மாதிரிகளைத் தேட வேண்டிய அவசியம் ஏற்படாது.

*தொடரும்.....*

## சீவன்கள்

**[சொ. வள்ளியப்பன், வேதாந்த மாணவர்]**

இந்தச் சீவர்களின் உடலை - அதாவது தூல, சூட்சும, காரண மூன்றும் அடங்கிய உடலை, வேதாந்தம் மற்றொரு விதமாகவும் வகைப்படுத்துகிறது. இம்மூன்று உடல்களையும் ஐந்து கோசங்களாக (உறைகளாக), வாளை அதன் உறை மூடியிருப்பது போலவும், புளியம்பழத்தை அதன் ஓடு மறைப்பது போலவும் மூடி மறைத்துக் கொண்டுள்ளது என்கிறது. இந்த ஐந்து கோசங்களாவன - அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்பனவாம். இவைகள் ஆத்மாவை மூடி மறைத்தலால் கோசங்கள் எனப்பட்டன. (மயம் = விகாரம் அல்லது மாற்றம், கோசம் = மறைப்பு).

| | | |
|---|---|---|
| தூல சரீரம் | = | அன்னமயகோசம் |
| சூட்சும சரீரம் | = | பிராணமய கோசம், மனோமய கோசம் விஞ்ஞானமய கோசம் |
| காரண சரீரம் | = | ஆனந்தமய கோசம் |

உணவினால் உண்டாக்கப்பட்டு, உணவினால் வளர்க்கப்பட்டு, இறந்தபின் பிறஉயிர்களுக்கு உணவாகும் சீவர்களின் இத்தூல சரீரம் அன்னமய கோசமாம். அன்னமய கோசத்தின் விகாரங்கள் இருப்பு, பிறப்பு, வளர்ச்சி, மாற்றம், தேய்வு மற்றும் மரணமாம். பிராணமய கோசத்தின் இயல்பு (தர்மம்) பசி, தாகம், வெப்பம், குளிர்ச்சியாம். மனோமய கோசத்தின் விகாரங்கள். எண்ணுதல், சந்தேகப்படுதல், கோபம், மகிழ்ச்சி, சோகம், காமம். இக்கோசம் பதினாறு விகாரங்களை உடையது என வேதாந்தம் கூறுகிறது.

விஞ்ஞானமய கோசத்தின் தர்மம் பகுத்தறிவு, தீர்மானம் செயல்படுதல், அனுபவித்தலாம். அன்னமய கோசத்தைவிட பிராணமய கோசம் நுட்பமானது. பிராணமய கோசத்தை விட விஞ்ஞானமய கோசம் நுட்பமானது. விஞ்ஞானமய கோசத்தை விட ஆனந்தமய கோசம் நுட்பமானது. இவ்வாறு கோசங்கள் ஒன்றைவிட ஒன்று நுட்பமானவை.

இக்கோசங்கள் ஐந்தும் ஆத்மாவை மறைக்கின்றபடியால் இவ்வைந்து கோசங்களும் 'நான்' அல்ல என்று சீவர்கள் உணர வேண்டும். ஆத்மாவிற்கும் கோசங்களுக்கும் இடையே உள்ள தொடர்பு 'அன்யோன்ய அத்யாஸம்' எனப்படும். அதாவது ஒன்றின் செயல்பாட்டை அல்லது தன்மையை மற்றொன்றின்மீது ஏற்றிக்கூறுவது. நான் இளைத்து விட்டேன் என்று கூறும் போது அன்னமய கோசம் இளைத்துவிட்டதே தவிர 'ஆன்மா' இளைக்கவில்லை. இவ்வைந்து கோசங்களும் அத்யாசத்தால் ஒன்றாகக் கலந்து இருக்கின்றன. கோசத்தின் தர்மம் ஆத்மாவிலும், ஆத்மாவின் தர்மம் கோசத்திலும் தோன்றுகிறது.

அடுத்து, சீவர்களுக்கு மூன்று விதமான அனுபவநிலைகள் (அவஸ்தைகள்) உள்ளன என்கிறது வேதாந்தம். அவை விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்க நிலை என்பனவாம்.

சீவர்கள் தங்களது பொறி புலன்கள் மூலம் இந்த உலகிலுள்ள பொருள்களை அனுபவிக்கும் நிலை விழிப்பு நிலை. நம் தூல உடம்பு அபிமானத்தின் காரணமாக உலகிலுள்ள போகப் பொருள்களை அனுபவிக்க விரும்புகிறது. அறிகருவிகள் 5, செயற் கருவிகள் 5, வாயுக்கள் 5, அந்தக்கரணம் 5 ஆக 20 வாயில்கள் மூலமாக சீவர்கள் புறஉலகை அனுபவிக்கிறார்கள். நனவு நிலையில் மூன்று தேகத்திற்கும் (தூல, சூக்கும, காரண) சீவன் அபிமானியாக உள்ளான்.

**கனவு நிலை :** இந்நிலையில் விழிப்பின்போது உண்டான பதிவுகளின் மூலமாகக் கனவில் பொருள்களைக் காண்கிறான். மனதிலேயே உலகை உண்டு பண்ணி அதை அனுபவிக்கும் நிலை. இந்நிலையில் தூல சரீர அபிமானம் இல்லை, சூட்சும, காரண சரீரங்களின் அபிமானம் மட்டுமே உள்ளது. இந்நிலையில் உணர்வு அகமுகமாக உள்ளன. மேற்கூறிய 20 வாயில்களும் கனவு நிலையில் மன உலகை அனுபவிக்கின்றன. உடம்பும், உணர்வு மனமும் (Conscious Mind) ஒய்வு நிலையில் உள்ளன. ஆழ்மனம் (Sub-Conscious Mind) விழித்திருக்கின்றது.

ஆழ்ந்த உறக்க நிலை (சுழுத்தி) : இந்நிலையில் காரண சரீரம் மட்டும் உள்ளது. மற்ற இரு சரீரங்களின் அபிமானம் இல்லை. விழிப்பும் இல்லை, கனவும் இல்லை, இரண்டும் இல்லாத நிலை. பொறிபுலன்கள் அடங்கிய நிலை. எல்லா வகையான அறிவுகளும் இல்லாத நிலை. அனுபவம் மட்டும் மிஞ்சிய, ஆனந்த நிலை. இந்நிலையில் ஆழ்மனமும் ஓய்வு நிலையில் உள்ளது.

இவ்வாறாகச் சீவனுக்கு வரும் அனுபவங்கள் (அவஸ்தைகள்) மூன்றாகப் பிரிக்கப்படுகின்றன.

இதுவரை நாம் அறிந்தது சீவர்களின் அனாத்மா (அறிவுஅற்ற) பாகம். இனிச் சீவர்களின் ஆத்ம (அறிவுக்கூறு) பாகத்தைப் பார்ப்போம்.

நாம் முன்பு பார்த்த கனவு, நனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று நிலைகளுக்கும் சாட்சியாக இருப்பது ஆத்மாவே. இந்த ஆத்மா முன் கூறிய ஐந்து கோசங்களாலும் மறைக்கப்பட்டுள்ளது போல இருக்கிறது. உண்மையில் மறைக்கப்படவில்லை. நமது அஞ்ஞானத்தால் கோசங்களுக்குள் மறைந்திருக்கும் இந்த ஆத்மாவை நாம் உணர முடிவதில்லை. ஆத்மா அறிவு வடிவம் (சொரூபம்), தன்ஒளிர்வானது (சுயம் பிரகாசம்). தூல சரீரத்தைப் போல விகாரமடையக் கூடியது அல்ல, அழிவும் இதற்கில்லை. நீருக்கு ஏற்படும் ருசி, நிறம், வாசனை உண்மையில் நீருக்குடையவை அல்ல. பொருள்களின் சேர்க்கையால் ஏற்பட்ட குற்றம். அதுபோலவே தேகத்து வேறாக ஆத்மா உள்ளது என்று அறிந்து கொள்ள முடியாத அளவிற்கு, தேகமே ஆத்மா என்று சொல்லக் கூடிய அளவிற்கு, ஒன்றாகச் சேர்ந்திருப்பதால் தேகத்தின் தர்மங்களை (செயல்களை) எல்லாம் ஆத்மாவில் இருப்பதாக அறியாமையால் சீவர்கள் எண்ணுகிறார்கள்.

இவ்வாறாக, சீவர்களை 'நீ ஆத்ம சொரூபம்' என்று பேசுகிறது வேதாந்தம்.

*முற்றும்*

# மடாலய நிகழ்வுகள்

27.12.2013 அன்று அமெரிக்காவில் உள்ள சான்டியாகோ ஸ்டேட் பல்கலைக்கழகப் பொருளாதாரப் பேராசிரியராகப் பணியாற்றி வரும் டாக்டர் எம்.சி. மாதவன் கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் உரையாற்றினார். இக்கூட்டத்திற்குக் கல்லூரி முதல்வர் டாக்டர். குமரப்பன் தலைமை தாங்கினார். பேரா. மனோஜ் வரவேற்றார். கோவிலூர் கல்வி நிலையங்களின் ஒருங்கிணைப்பாளர் டாக்டர் மெய்யப்பன் சிறப்பு விருந்தினருக்குப் பொன்னாடை போர்த்தினார். பேரா. விக்னேஷ் நன்றி கூறினார்.

4.1.2014 அன்று குறள்விழாவை முன்னிட்டுப் பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கான போட்டிகள் நடத்தப்பெற்றன. திருக்குறள் ஒப்புவித்தல் போட்டியிலும் பேச்சுப்போட்டியிலும் எண்பதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் கலந்துகொண்டனர்.

காப்பியக் கவிஞர் நா. மீனவன், ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி முதல்வர் திருமதி மணிமொழி மோகன், ஆசிரியைகள் திருமதி ரெஜினா, செல்வி கமலம் ஆகியோர் ஒப்புவித்தல் போட்டிக்கும் நாச்சியப்ப சுவாமிகள் கலைஅறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர் சே. குமரப்பன், காப்பியக் கவிஞர் திரு. நா. மீனவன், நாச்சியப்ப சுவாமிகள் கலைஅறிவியல் கல்லூரியின் கணினி இயல்துறைத் தலைவர் கே.கலா ஆகியோர் பேச்சுப் போட்டிக்கும் நடுவர்களாக அமர்ந்து சிறப்புச் செய்தார்கள்.

8.1.2014 அன்று கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் அனிமேசன் மற்றும் ஸ்பெசல் எபெக்ட் குறித்த கலந்துரையாடல் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் முன்னிலை வகித்தார். கல்லூரி முதல்வர் டாக்டர். குமரப்பன் தலைமையில் நடைபெற்ற இக்கலந்துரையாடலில் புகழ் பெற்ற திரைப்படத் தொகுப்பாளரும் 5 முறை தேசிய விருது பெற்றவரும்

100 படங்களுக்கு மேல் எடிட் செய்தவரும் புகழ் பெற்ற காதலன், ஜீன்ஸ், முதல்வன், இந்தியன் போன்ற படங்களை எடிட் செய்தவருமான லெனின் தனது அனுபவங்களையும் அனிமேசன் துறைக்கான வாய்ப்புகள் குறித்தும் பேசினார். அமெரிக்காவில் லாஸ் ஏஞ்சல்சில் புகழ் பெற்ற ஹாலிவுட் படங்களான மேன் ஆன் பயர், ஹார்ஷ் டைம்ஸ் போன்ற திரைப்படங்களுக்கு அனிமேசன் செய்த புகழ் பெற்ற அமெரிக்கர் பிரைன் ஜென்னிங்ஸ், மாணவர், ஆசிரியர்களிடையே கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டார்.

9.1.2014 அன்று மடாலயம் சார்பில் பள்ளி, கல்லூரி மாணவிகளுக்கும் பொதுமக்களுக்கும் கோலப்போட்டி மிகச்சிறப்பாக நடைபெற்றது. கோவிலூர் சுவாமிகள் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் முன்னிலை வகித்துச் சிறப்புச் செய்தார்கள்.

10.1.2014 அன்று காலை 9.30 மணிக்குமேல் மடாலயம் முன்பாக சனாதன தர்ம உலகப்பல்கலைக் கழக அறநிலை நிறுவனங்களின் சார்பில் பொங்கல் விழா நடைபெற்றது. 12 மணிக்குமேல் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் வழிபாடு நிகழ்த்தியபின் பள்ளிக் குழந்தைகட்கும் கல்லூரி மாணவர்கட்கும் பொங்கல் வழங்கிச் சுவாமிகள் ஆசி வழங்கினார்கள்.

## சேக்கிழார் போற்றும் பெண்ணின் பெருமை

*சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்*

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகிற் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

என்னுடைய இளம் வயதிலே என்னைப்பெரும் வியப்பிற்கும் திகைப்பிற்கும் ஆளாக்கிய வரலாறு திலகவதியார் வரலாறுதான். இப்படியும் ஒரு உறுதியா ? மனவயலுவா? அதுவும் ஒரு பெண்ணின் மென்மையான மனத்திலா? என்று ஆச்சரியப்பட்டுப் பெரிய புராணத்தைப் படிக்கத் தொடங்கினேன். அதுவே என்னை இறை ஆளுமைக்கு உட்படுத்திய தொடக்கம். அப்பொழுதே திலகவதியார் பற்றிச் சில பாடல்கள் மற்றும் கட்டுரை ஒன்றும் எழுதி எங்கள் கையெழுத்துப் பத்திரிக்கையில் வெளியிட்டேன். விரிவாக எழுதவேண்டும் என்று ஆவல். அதனையும் பெரியபுராணத்தில் சிறப்பிக்கப்பட்ட மற்ற பல பெண்களைப்பற்றியும் எழுத மிக்க ஆவல்.

அந்த ஆவல் ஏறக்குறைய நாற்பத்தைந்து ஆண்டுகள் கழித்து உருப்பெற்றுள்ளது. பெரியபுராணம் அடியார்களை, அவர்தம் திருத்தொண்டைப்பற்றி விரிவாகப் பேசுகிற அருமையான நூல். அது எந்த அடியாரைப் பற்றிப் பேசினாலும் அவர்தம் தொண்டின் திறத்தையும் மன உரத்தையும் பற்றியே பேசுகிறது. அவர்கள் மனத்தகத்தே பொங்கி வழிந்த பேரன்பே அவர்களைத் தன்னலமற்ற தொண்டர்களாக இறை அன்பர்களாக ஆக்கியது. மன உரம் இல்லாதவன், மனத்தே அன்பும் இறைபக்தியும் இல்லாதவன் உண்மையான மக்கள் தொண்டனாக ஆக முடியாது.

நாயன்மார்க்கு அடிப்படைக குணங்களாகப் பலவற்றைச் சேக்கிழார் குறிப்பிடுகிறார். அவை அனைத்தும் அப்பர் சுவாமிகளின்

தனிக்குணங்களாகத் தெரிகின்றன. சேக்கிழார் அப்பரை அடியார்கட்கு (Role Model) முன்மாதிரியாகக் கொண்டுள்ளார்.

சேக்கிழார் பெரிய புராணத்திற்கு இட்ட பெயர் – 'திருத்தொண்டர் புராணம்'. சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத்தொகை முதல் நூலாகும். நம்பியாண்டார் நம்பி எழுதிய திருத்தொண்டர் திருஅந்தாதி வகை நூலாகும். சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம் தொகை நூலாகும்.

சுந்தரர் திருத்தொண்டத்தொகையில் அடியார் பற்றி எந்தச் செய்தியையும் எழுதவில்லை. அடியார்களைப் பற்றி ஒன்றிரண்டு அடைமொழிகளுடன் ஒருவரியோ இரண்டு வரியோ பாடிச்செல்கிறார். பதினொரு பாட்டுக்குள் அறுபத்து மூன்று நாயனார்களையும் ஒன்பது தொகை அடியார்களையும் பாடிவிடுகிறார். அந்தாதியில் ஒனிறிரண்டு பாடல்கள்.

சேக்கிழாரின் வாக்குமூலப்படி அவர் சுந்தரர் திருத்தொண்டத்தொகையையே அடிப்படையாக வைத்துப்பாடுகிறார். திருத்தொண்டர் அந்தாதி பற்றிப் பேசப்படவில்லை.

"சுந்தரர் திருத்தொண்டத் தொகைத் தமிழ்
வந்து பாடிய வண்ணம் உரை செய்வாம்"

அறுபத்து மூன்று நாயன்மார்கள் ஒன்பது தொகை அடியார்கள் என்பது முடிவான ஒன்று; மீற முடியாதது. சரி. அவர்கள் வரலாறு குணநலன்கள் இவைபற்றி எப்படி அறிவது.

சேக்கிழார் தனது அமைச்சுப்பணியின் துணைகொண்டு செய்திகள் சேகரித்துநாயன்மார்கள் ஊர்கட்கு எல்லாம் சென்று உண்மைகளைக் கண்டறிந்து திருத்தொண்டர் புராணத்தைச் செம்மையான வரலாற்று நூலாகச் செய்துள்ளார். தனக்குக் கிடைத்த உண்மையான செய்திகளைத் தவிர்த்து எதனையும் அடியவர்

வரலாற்றில் சேக்கிழார் சேர்க்கவில்லை. சேக்கிழாரின் கற்பனை வளம் - நகரம் - நாடு, வயல் காடு பற்றிய பாடுகின்ற போது மட்டுமே பயன்படுகின்றது, சிறக்கின்றது. வரலாறுச் செய்திகளில் எவ்விதக் கற்பனையும், ஒப்பனையும் இடம்பெறவில்லை.

அடியார்கள் என்பவர் யார்? அவர்க்கு என்ன என்ன தகுதிகள் வேண்டும்? திருக்கூட்டச் சிறப்பில் தெளிவாக வரையறை செய்து விடுகிறார்.

கீழ்க் கண்ட பண்பும் தகுதியும் அடியார்க்கு உரியவை.

1. திருநீறணிதல்
2. அஞ்செழுத்து ஓதுதல்
3. அகிலகாரணர் தாள் பணிதல்
4. அன்பு நிறை சிந்தையர்
5. பூசுநீறு போல் உள்ளம் புனிதர்கள்
6. பூதம் ஐந்தும் நிலை கலங்கினும் நிலை கலங்காது - மாதோர் பாகத்தன் மலர்த்தாள் மறப்பிலார் -
7. கைத்திருத்தொண்டு செய் கடப்பாட்டினார்
8. காதல் உறைப்பின் நெறி நின்றார்
9. கோதிலாத குணப்பெருங் குன்றனார்
10. கேடும் ஆக்கமும் இல்லாத - திருவுடையார்கள் ஓடும் செம்பொனும் ஒன்றென எண்ணுவார்
11. கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலினார்.
12. ஆரம் கண்டிகை, ஆடை கந்தை
13. ஈசன் பணி அல்லது ஒன்றிலார்
14. ஈர அன்பினார் - நெஞ்சில் வீரம் மிக்கோர்
15. தாண்டவப் பெருமான் தனித்தொண்டர்கள்.



# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் - காரைக்குடி - 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)

(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள் :

**B.A., English**
**B.Sc., Computer Science**
**B.Com.,**
**B.Com. (C.A).,**
**B.B.A.,**
**B.Sc., Maths** (Subject to Affiliation)
**B.Sc., Visual Communication** (Subject to Affiliation)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரியவாய்ப்பு !!

**B.Sc. Visual Communication.,**

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலில் தொடங்கப்படும் வகுப்பு)

2014 - 2015 ஆம் கல்வியாண்டு
மாணவர் சேர்க்கைக்கான விண்ணப்பங்கள்
4.4.2014 முதல் வழங்கப்பெறும்.

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் :

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்